தேரூர்ந்து வருங்கால் அவன்றன் தேரிற்கட்டிய கொடியே முதலிற் கண்ணுக்குப்புலனாதல்போல, இறைவன் ஞாயிற்று மண்டிலமாகிய தேரூர்ந்துவருங்கால் அவனது வருகையினைக் கூவி முன்னறிவிக்குந் தொடர்புபற்றிக் கோழியானது அவன் கொடிக்கண் உளதாக வைத்துச்சொல்லப்பட்டதென்று ஓர்ந்து கொள்க. இங்ஙனமே சிவபிரான், திருமால், பிள்ளையார், முதலான தெய்வத்திருவுருவங்களின் ஊர்தி, கொடி, படை முதலிய அடையாளங்களும் இயற்கை நுண்பொருள் நிரம்பி யிருத்தலை உய்த்து அறிந்துகொள்க. அவையெல்லாம் ஈண்டு எடுத்து உரைக்கப்புகின் இந்நூல் வரம்பின்றி விரியும். இது காறும் விளக்கியதுகொண்டு, இறைவன் தவத்திற்சிறந்த முனி வர்களாலுங் கேட்டறியப்படாதவனாய்ப் பிறப்பில்லாமையின் இறப்புமில்லாதவனாய்ப், பிறப்பால் வருஞ் சுற்றத்தொடர்பு மில்லாதவனாய் ஐம்பொறிகளின் உதவியின்றியே எல்லாவற் றையும் அறிபவனாய் இருப்பனென்பதூஉம், அங்ஙனம் எல் லாங் கடந்த ஆண்டவன் தானாகவே இரங்கிவந்து தன் அரு ளுருவைக் காட்டினாலன்றி அவன்றன் அருமைத் திருவுரு வினை நம்மனோர் காணமாட்டுவார் அல்லரென்பதூஉம், மாணிக்கவாசகரை யொத்த நம்மாசிரியன்மார் ஒருசிலர்க்கு இறைவன் அவர்தங் கட்புலனாய்த்தோன்றிக் காட்டிய திரு வுருவே அவன்றன் உண்மையுருவாய் எம்மனோர் வழிபாட் டை ஏற்று எமக்கு இப்பிறவித்துன்பத்தை யறுத்து மீளா வீடு பேற்றின்பத்தில் எம்மைநிலைப்பிக்கும் என்பதூஉம், இவ்வாறு நம்மாசிரியன்மார்க்குத் தோன்றிய இறைவன் அருளுருவம் மின்னொளிபோற் றோன்றிச் சடுதியில் மறைவதாதலின் அத னைப் பிறப்பு இறப்புக்களுட் படுத்துப் பொருந்தாப் பொய் யுரை கிளக்கும் புராணப்புல்லுரைகளத்தனையும் ஒருங்கே விலக்கற்பாலனவா மென்பதூஉம் இனிது உணரப்படும் என்க. ஓம்சிவம்.

